கோடையில் இயற்கை சூழல் மிகுந்த **ஏற்காடு மலைப் பிரதேசத்தில் 5 நாள்**

# சிறப்பு ஞானமுகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

**தலைப்புகள் :** 1. ஞானப்புரிதல் 2. அகம்-புறம் 3. நான் யார்? 4. நினைவும் சிந்தித்தலும் 5. மனோலயம் - மனோ நாசம் 6. கர்மவினை 7. தெளிவில் உறுதி

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission


31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555

www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075


இடம் : House of Peace (Glass House) அமைதி இல்லம், ஏற்காடு.
நாள் : 1-5-2019 புதன்கிழமை மாலை 4 மணி முதல்
5-5-2019 ஞாயிறு மாலை 3.00 மணி வரை

- இது கோடை காலத்திற்கு ஏற்ற சுற்றுலா தலமாக அமைந்திருப்பதால் குடும்பத்துடன் பங்கு பெறலாம்.
- ஆண்களுக்கும், பெண்களுக்கும் தங்குவதற்கான தனித்தனி இடவசதி உள்ளது. ஒவ்வொருவருக்கும் தனித்தனி படுக்கை வசதி உள்ளது. தனி அறைகள் 10 மட்டும் உள்ளதால் குடும்பத்துடன் வருபவர்களுக்கு மட்டும் தனி அறை கொடுக்கப்படும்.
- உணவு மற்றும் தங்கும் இடவசதிக்கான செலவு பகிர்வு தலா ஒருவருக்கு ரூ. 6000/- மட்டுமே.
- 90 நபர்கள் மட்டுமே தங்க இடமிருப்பதால் பங்கேற்க விரும்புபவர்கள் ஏப்ரல் 15ம் தேதிக்குள் முன்பதிவு செய்திட வேண்டுகிறோம்.

**முன்பதிவு செய்யும் வழிகள் :**

**M.O, D.D. (or) Cheque :** வரைவோலை அனுப்புபவர்கள் : A/c. Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**Direct Payment :** நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் :
Sri Bagavath Mission, HDFC A/c No. : 15907620000075
NEFT IFSC : HDFC 0001590 என்ற வங்கிக் கணக்கில் செலுத்தி தெரியப்படுத்தவும்.

**Online Payment :** Credit Card or Debit Card மூலம் www.sribagavathmission.org என்ற வெப்சைட்டிலும் முன்பதிவு செய்யலாம்.


**ஸ்ரீ பகவத் மிஷன்**
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3.
கைப்பேசி : **9994205880, 97891 65555**



# தேர்தலில் வாக்களிப்பது எவ்வாறு?



- ஸ்ரீ பகவத்

இந்தியா எத்தனையோ தேர்தல்களைச் சந்தித்து விட்டது.

பல்வேறு கட்சிகள் ஆட்சியில் அமர்ந்து சென்றுவிட்டன.

நாடு முன்னேற்றமடைந்து விட்டதா?

நாட்டின் பொருளாதாரம் வளர்ந்து விட்டதா?

நாட்டின் கல்வி, சுகாதாரம் வளர்ந்து விட்டதா?

எல்லா துறைகளிலும் நல்ல வளர்ச்சி காணப்படுகிறது. அதுதான் உண்மை.

அப்படியானால் நமது நாடு, தனது வளர்ச்சியில் நிறைவடைந்து விட்டதா? நாட்டின் தேவைகள் அனைத்தும் பூர்த்தியடைந்து விட்டனவா? நாட்டின் குற்றச் செயல்கள் அனைத்து குறைந்துவிட்டனவா?

இந்த கேள்விகளுக்கு மட்டும் நம்மால் எதிர்மறையான பதிலைத்தான் கொடுக்க முடிந்துள்ளது.

எல்லா துறைகளிலும் வளர்ச்சி இருந்தாலுங் கூட இன்னும் போதிய வளர்ச்சி இல்லை.

குற்றச் செயல்கள் மட்டும் மிக அதிகமாக வளர்ந்து கொண்டிருக்கின்றன.

இவைகளுக்கெல்லாம் தேர்தல் ஒன்று தான் உபாயமா?

தேர்ந்தெடுக்கப்படும் அரசியல்வாதிகள் அனைவரும் இதனை நிறைவேற்றும் தகுதியுடையவர்களா?

ஒரு கட்டடம் கட்டுவதாக வைத்துக்கொள்வோம். கட்டடத் தொழிலாளர்களைக் கூப்பிட்டு கட்டடத்தைக் கட்டச் சொல்லி விடலாமா?

கட்டடத் தொழிலாளர்களுக்குக் கட்டடத்தைக் கட்டி பல வருட அனுபவங்கள் இருக்கலாம். அந்த அனுபவத்தைக் கொண்டு அவர்களால் ஒரு நவீன மாளிகையை அமைத்து விட முடியுமா?

அவர்களால் ஓரளவுதான் முடியும். பொறியாளர்களின் ஆலோசனைப்படி அவர்கள் ஒரு கட்டடத்தைக் கட்ட முடிந்தால் அது இன்னும் நேர்த்தியாக இருக்கும்.

அதுபோல் ஒரு பொறியாளரைக் கூப்பிட்டு அவரையே கட்டுமான வேலைகளையும் செய்யுமாறு கூறினால் அவரால் செய்ய முடியுமா?

ஆலோசனைகளை வழங்குவதோடு அவர் நிறுத்திக் கொள்ள வேண்டும்.

ஒரு நாட்டை எடுத்துக்கொண்டோமானால் அரசு ஊழியர்கள் தாம் அரசாங்கத்தை நடத்தி வருகின்றனர்.

அவர்கள் என்னென்ன காரியங்களைச் செய்யவேண்டும், எப்படி செய்ய வேண்டும் என

கொள்கை முடிவு எடுக்கும் பணியை மக்களால் தேர்வு செய்யப்பட்ட மக்களின் பிரதிநிதிகள் முடிவு செய்கிறார்கள்.

மக்களின் பிரதிநிதிகள் என்பவர்கள் யார்?

அவர்கள் தாம் அரசியல்வாதிகள்.

அந்த அரசியல்வாதிகள் எப்படிப்பட்டவர்கள்?

குற்றவாளிகளின் கடைசிப் புகலிடம் தான் அரசியல் என்றுகூட ஒரு கூற்று உண்டு.

அரசியல்வாதிகள் அனைவரும் குற்றவாளிகளா? குற்ற நோக்கத்துடன்தான் அவர்கள் அரசியலுக்கு வந்துள்ளார்களா?

பஸ் நிறுத்தம் ஒன்றில் பஸ்சுக்காகப் பலர் காத்திருப்பதாக வைத்துக்கொள்வோம். பஸ் நிறுத்தமிருக்கும் சாலையில் சிறிய விபத்தொன்று அனைவருக்கும் முன்பாக ஏற்பட்டுவிடுகிறது.

பாதிக்கப்பட்டவர்களுக்கு சிறிய காயம் தான். ஆனாலும் மருத்துவமனைக்குச் செல்ல வேண்டிய அவசியம் உள்ளது.

பாதிக்கப்பட்ட அவர்களுக்கு, பஸ் நிறுத்தத்தில் காத்திருந்த எவரெல்லாம் உதவி செய்ய முன்வருவர்?

உதவி செய்யும் எண்ணம் அனைவருக்குமே இருக்கும். ஆனாலும் கூட தங்களுடைய அப்போதைய வேலையின் அவசியம் கருதிப் பின்வாங்க ஆரம்பித்து விடுவர்.

அந்தக் கூட்டத்தில் அரசியல்வாதி ஒருவர் இருக்கும் பட்சத்தில் அவர்தான் உதவி செய்யும் முதல் ஆளாக ஓடி வருவார். அவருக்கும் சொந்த வேலைகள் இருக்கத்தான் செய்யும். ஆனாலும் உதவி செய்ய முன்வரத் தயங்கமாட்டார்.

இதுதான் அரசியல்வாதியின் சிறப்பியல்பு.

உதவி செய்யும் சிறந்த பண்புள்ள இந்த அரசியல்வாதி ஒழுக்க சீலராக இருப்பாரா?

ஒழுக்க சீலங்களைப் பொறுத்த அளவில் அவர் ஒரு சராசரி மனிதராகத்தான் இருப்பார். சராசரி மனிதருக்குள்ள குறைநிறைகள் அவரிடம் இருக்கத்தான் செய்யும்.

ஆனாலும் கூட அந்த அரசியல்வாதி ஒரு சராசரி மனிதரை விடவும் ஒரு விதத்தில் உயர்ந்தவரே. அடுத்தவர்களுக்கு உதவும் தன்மையில் சராசரி மனிதரிலும் உயர்ந்தவரே.

அதனால்தான் அரசியல்வாதிகள் சராசரி மனிதரைக் காட்டிலும் பிரபலமாகி விடுகின்றனர்.

அவரைச் சுற்றிக்கூட்டமும் சேர்ந்து விடுகின்றது.

ஆனாலும் கூட ஒழுக்கத்தைப் பொருத்த அளவில் அவர் ஒரு சராசரி மனிதராக இருப்பதால் ஊழல் புரிவதற்கும் அவர் தயங்குவதில்லை.

இதுதான் இயற்கை. இதுதான் நடைமுறை உண்மையாக இருக்கிறது.

ஆனாலுங்கூட இந்த இயற்கைக்கு மாறாகவும் ஒரு சில அரசியல்வாதிகள் ஒழுக்கசீலர்களாக இருக்கின்றனர்.

நம்மால் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் எப்படி இருக்க வேண்டும் என நாம் விரும்புகின்றனர்?

ஒரு சராசரி அரசியல்வாதியை விரும்புகின்றோமா, அல்லது ஒழுக்க சீலரான ஓர் அரசியல்வாதியை விரும்புகிறோமா?

நீங்களும் நானும் எவரை விரும்புகிறோம் என்பதை விட பொதுமக்கள் எவரை விரும்புகிறார்கள்?

சமீபத்தில் தமிழ்நாட்டில் சட்டமன்ற தொகுதி ஒன்றுக்கான இடைத்தேர்தல் நடைபெற்றது. ஆளுங்கட்சி சார்பில் ஒருவரும், எதிர்க்கட்சிகள் மற்றும் சுயேட்சைகள் பலரும் அந்த இடைத்தேர்தலில் போட்டியிட்டனர்.

பொதுவாக இத்தகைய இடைத்தேர்தல் நடைபெறும் காலங்களில்லெல்லாம் ஆளுங்கட்சி சார்பில் போட்டியிடுபவரே வெற்றி பெறுவது வழக்கம்.

ஏனெனில் வேறு எவர் வெற்றி பெற்றாலும், தனி ஒருவராக இருந்து ஆட்சியில் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்த முடியாது.

அதனால் எதிர்க்கட்சிகளுக்குப் போடும் ஓட்டுகள் அனைத்தும் வீணடிக்கப்பட்ட ஓட்டுகளே ஆகும்.

ஆனால் சமீபத்தில் நடந்து முடிந்த இந்த இடைத்தேர்தலில் மட்டும் ஒரு வித்தியாசமான முடிவு ஏற்பட்டது. ஆளுங்கட்சியின் வேட்பாளர் தோல்வியடைந்து விட்டார். எதிர்த்துப் போட்டியிட்ட எதிராளி வேட்பாளர் வெற்றி பெற்றுவிட்டார்.

ஓட்டளித்தவர்களுக்கெல்லாம் கணிசமான ஒரு தொகை கொடுக்கப்படும் என்ற உறுதிமொழியின் பெயரில் இவ்வாறு அவருக்கு அதிக ஓட்டுகள் கிடைத்துள்ளதாக கூறப்படுகிறது.

வெற்றி பெற்ற அவரால் சட்டசபையில் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்த முடியாது. ஆனாலும் அதிக ஓட்டுகள் பெற்று ஒரு சாதனையை அவர் படைத்துக் காட்டிவிட்டார்.

இது எதைக் காட்டுகிறது?

"எவருக்கு ஓட்டளிப்பதன் மூலமும் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்த முடியாது. கிடைக்கிற பணத்தை வாங்கிக் கொள்வோம்" என்ற ஒரு சராசரியான சிந்தனை தான் வாக்களித்தவர்களுக்கு இருந்திருக்கிறது.

பொதுமக்கள் அனைவரும் ஓட்டளிப்பவர்கள் அனைவரும் ஒழுக்கசீலர்களாக இருப்பார்கள் என்று கூறிவிட முடியாது. அதனால் அவர்கள் ஒழுக்க சீலரையே தேர்ந்தெடுப்பார்கள் என்றும் கூறிவிட முடியாது.

சமீபத்தில் நாடு முழுவதும் பண மதிப்பு நீக்க நடவடிக்கை எடுக்கப்பட்டது.

இது எதற்காக எடுக்கப்பட்டது, சுயலாபம் கருதியா?

பொது நன்மைக்காக எடுக்கப்பட்ட ஒரு நடவடிக்கை இது.

இந்த நடவடிக்கை வெற்றி பெற்றதா?

இதைப்போன்றதொரு நடவடிக்கை இங்கிலாந்து நாட்டில் நடைபெற்றது. அவர்கள் கறுப்புப் பணத்தை ஒழிப்பதற்காகக் கொண்டு வரவில்லை.

புழக்கத்தில் இருந்து வந்த ரூபாய் நோட்டுகள் சேதமடைந்த நிலையில் இருந்து வந்தன. சேதமடைந்த

நோட்டுகளைப் புழக்கத்திலிருந்து அப்புறப்படுத்தும் நோக்கத்தில் புதிய ரூபாய் நோட்டுகளை அச்சிட்டு வெளியிட்டனர்.

பழைய நோட்டுகள் புழக்கத்திலிருந்து மறைந்து விட்டனவா?

மாறாக பழைய நோட்டுகளின் புழக்கம் மேலும் அதிகரித்து விட்டன.

"புது நோட்டுகள் பழைய நோட்டுகளைப் புழக்கத்திலிருந்து விரட்டாது; பழைய நோட்டுகள் தாம் புது நோட்டுகளைப் புழக்கத்திலிருந்து விரட்டிவிடும்" என்ற ஓர் உண்மையைக் கண்டுபிடித்தார்கள்.

புது நோட்டுகள் அனைத்தையும் சேமிப்பாக வைத்துக்கொண்டு, சேமித்து வைத்திருந்த பழைய நோட்டுகளையெல்லாம் புழக்கத்தில் விட்டுவிட்டார்கள். நாம் நல்ல நோக்கத்தில் ஒரு திட்டத்தை அறிமுகம் செய்யலாம். ஆனால் அது வெற்றிகரமாகச் செயல்படுமா என்பதை நூறு சதவீதம் துல்லியமாக அனுமானிக்க முடியாது.

விஞ்ஞானி ஒருவர் பூனையொன்றை வளர்த்தார். அந்த பூனை தங்குவதற்கு மரத்தால் ஆன கூண்டு-குடில் ஒன்றை அமைத்தார். அந்தக் கூண்டினுள் பூனை நுழைந்து செல்லும் அளவில் துவாரம் ஒன்றை வாயிலாக அமைத்தார்.

அந்தப் பூனையும் அந்தக் கூண்டில் வசித்து வந்தது. அதற்காகப் போடப்பட்டிருந்த துவாரத்தின் வழியாக அது உள்ளே செல்லவும், வெளியே வருவதுமாக இருந்தது.

காலப்போக்கில் அந்தப் பூனையானது குட்டியொன்றை ஈன்றது. இப்போது அந்த விஞ்ஞானி அந்த பூனைக் குட்டி கூண்டுக்குள் நுழைந்து செல்ல பாதை ஒன்றை அமைக்கத் திட்டமிட்டார்.

முதலில் அவர் அமைத்திருந்த தாய்ப்பூனைக் கான பெரிய பாதையை ஒட்டி, குட்டி சென்று வருவதற்கான சிறிய துவாரம் ஒன்றைப் பாதையாக அமைத்தார்.

ஆனால் குட்டியானது அந்த விஞ்ஞானியின் விருப்பப்படி நடந்து கொள்ள வில்லை. தாயுடைய பாதையையே அதுவும் பயன்படுத்தி தாயுடன் உள்ளே செல்லவும், வெளியே வரவும் ஆரம்பித்தது.

குட்டிக்காக அமைக்கப்பட்ட பாதை பயனற்று போயிற்று.

சமீபத்தில் 500ரூபாய் நோட்டுகளும், ஆயிரம் ரூபாய் நோட்டுகளும் செல்லாது என அறிவிக்கப்பட்டது. ஏன்?

அனைவரையும் சிரமப் படுத்துவதற்காகவா?

கருப்பு பணத்தைக் கட்டுப்படுத்த வேண்டும் என்ற நல்ல நோக்கத்திற்காகவே அரசு இந்த நடவடிக்கையை மேற்கொண்டது.

ஆனால் எதிர்பாராதவிதமாக இந்தியப் பொருளாதார வளர்ச்சியே ஸ்தம்பித்துப் போய் விட்டது.

ஒவ்வொருவரும் வாங்கவோ, விற்பனை செய்யவோ தயங்க ஆரம்பித்துவிட்டனர்.

நல்ல நோக்கத்தில் அறிமுகம் செய்த இந்தத் திட்டம் தோல்வி அடைந்து விட்டதை அரசாங்கம் ஒப்புக் கொள்ளுமேயானால்

அதை எதிர்க்கட்சிகள் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு விடும்.

இதனால் எந்த ஒரு அரசியல்வாதிக்கும், தாங்கள் செய்த தவறை ஒப்புக் கொள்வதற்குக்கூட சுதந்திரம் இல்லாமல் இருக்கிறார்கள்.

அப்படியானால் சீர்திருத்தக் கருத்துகள் எவற்றையும் செயல்படுத்த கூடாதா?

அறிவிற் சிறந்த அரசு அதிகாரிகள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். நிர்வாகம் மற்றும் நிர்வாகச் சீர்திருத்தங்கள் அனைத்தையும் அவர்களிடமே விட்டு விடுவது தான் சரியானதாக இருக்கும்.

அதிகாரிகளுக்கு உதவியாக நிபுணர் குழுக்களையும் அமைத்துக் கொள்ளலாம்.

புதிய அணுகுமுறைகளைப் பரிட்சார்த்தமாக அவர்கள் கொண்டு வரலாம். அதில் நடைமுறை சாத்தியமற்ற தன்மைகள் காணப்படும் போது அதனை நிவர்த்தியும் செய்து கொள்ளலாம்.

அப்படியானால் தேர்தல் வேண்டாமா?

நாடு முழுமைக்கும் ஒரே ஒருவரை தேர்ந்தெடுத்தால் போதும். அவரே தனக்கு வேண்டிய உதவியாளர்களையும், ஆலோசகர்களையும் வைத்துக் கொள்ளலாம்.

அப்படிப்பட்ட ஒருவர் சர்வாதிகாரியாகி விட மாட்டாரா?

அவர் சர்வாதிகாரியாக தான் இருக்க வேண்டும். அப்படி இருப்பவரால் தான் நல்ல திட்டங்களை கொண்டு வர முடியும்.

ஆனாலும் இராணுவ ஆட்சி நடத்தும் சர்வாதிகாரியாக அவர் இருக்க மாட்டார். ஏனெனில் நமது கருத்துப்படி ராணுவம் என்பதே ஆக்கப்பணிகளை மேற்கொள்ளும் சிவில் இராணுவமாக மட்டும்தான் செயல்படும்.

ஒவ்வொரு ஐந்து வருடங்களுக்கு ஒரு முறை இத்தகைய சர்வாதிகாரியைத் தேர்ந்தெடுக்கும் உரிமை மட்டும் வாக்காளர்களுக்கு கொடுக்கப்பட்டால் போதும்.

இது சாத்தியமா?

நாம் நமது நாகரீகத்தில் வளர்ச்சி காண்போமாயின் இதுவும் சாத்தியமே.

இதுதான் நாகரீகத்தின் அடுத்த கட்ட வளர்ச்சி.

அப்படிப்பட்ட சர்வாதிகாரி ஒருவரால்தான் நல்லதொரு வளர்ச்சியையும் நல்லதொரு சமுதாயத்தையும் ஏற்படுத்திக் காட்ட முடியும்.



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

# கேள்வி ? பதில்...

## நமது மோசமான குணங்களை மாற்ற வேண்டாமா?

**கேள்வி :** மன அமைதியே ஆரோக்கியம். மனம் அமைதி பெறவே அனைவரும் ஆன்மிகம் பக்கம் வருகிறார்கள். மனஅமைதியோடு செய்கின்ற வேலைதான் வெற்றி பெறும். "மனமது செம்மையானால் மந்திரம் செபிக்க தேவையில்லை" என்று பெரியவர்கள் கூறுகிறார்கள்.

பேராசை, சினம், கடும்பற்று, முறையற்ற பால் கவர்ச்சி, உயர்வு தாழ்வு மனப்பான்மை, வஞ்சம் என்ற மோசமான ஆறு குணங்களால்தான் இந்த சமுதாயத்தில் பஞ்சமா பாதகங்கள் என்று சொல்லக்கூடிய அனைத்து குற்றங்களும் நடைபெறுகின்றன. இக் குற்றங்கள் சமுதாயத்தில் களைய அறுகுண சீரமைப்பு மிகவும் அவசியம்.

இந்த ஆறு குணங்களையும் சீரமைத்தால் தான் மன அமைதி ஏற்பட்டு உடலிலும் ஆரோக்கியம் ஏற்படும். ஆனால் நீங்கள் "மனதை அதன்போக்கில் விடுங்கள்", "மனதை சீரமைக்க தேவையில்லை", "அகத்தில் செய்வதற்கு வேலையே இல்லை" என்றெல்லாம் கூறுகிறீர்கள். மோசமான குணங்கள் மோசமான செயலில் நம்மை ஈடுபடுத்தி விடாதா? விளக்கம் தேவை.

**பதில் :** நீங்கள் கூறியது அனைத்தும் உண்மையே. மனம் அமைதியாக இருந்தால்தான் உடல் ஆரோக்கியமாக இருக்கும். மனப் பிரச்சினையில் இருந்து விடுபடவே அனைவரும் ஆன்மிகத்தின் பக்கம் வருகிறார்கள். பல ஆன்மிக அமைப்புகளும் எத்தனையோ தியானப் பயிற்சிகளை கற்றுக் கொடுத்து வருகின்றன. இதனால் பலரும் பயன் அடைந்து வருகிறார்கள். ஆனால் இந்த தீர்வு நிரந்தரமானது கிடையாது. இது ஒரு தற்காலிகமான தீர்வு மட்டுமே.

சாவி கொடுத்த பொம்மை அதன் அழுத்தம் இருக்கும் வரை இயங்குவதுபோல் தியானம் செய்யும் வரை மனம் அமைதியாக இருக்கும். பிறகு யதார்த்த சூழ்நிலைக்கு மாறியவுடன் பிரச்சினை அனைத்தும் பழையபடியே வந்துவிடும்.

மேலும் நாம் ஒரு பிரச்சினையான சூழ்நிலையில் இருக்கும்போது தியானம் கூட நம்மால் செய்யமுடியாது. தியானங்களும் பயிற்சிகளும் ஆன்மிகத்தின் ஆரம்ப காலகட்ட சாதகர்களுக்கு வேண்டுமானால் பயன் தருவதுபோல் தோன்றும். ஆனால் இதுவே முடிவான முடிவல்ல. தியானத்தையும் கடந்த நிலைக்கு வரவேண்டும். தியானத்தால் கிடைக்கும் அமைதி நிலையானதல்ல. ஆனால் ஞானத்தால் கிடைக்கும் சுதந்திரம் நிலையானது.

தியானம் தேவையற்ற மன உணர்வுகளை கட்டிப்போட செய்கிறது. ஞானம் எல்லா மன உணர்வுகளையும் கடந்து போகச் செய்கிறது. எல்லா உணர்வுகளையும் கடந்து போவதை தான் ஆன்ம விடுதலை-முக்தி என்று குறிப்பிடுகிறார்கள். இதுவே ஆன்மிகத்தில் உயர்ந்த உச்ச நிலை. இது நமது பயிற்சி முயற்சியால் வருவது அல்ல. மனதின் இயற்கையான இயக்கத்தை புரிந்து கொள்வதால் வருவது. அக சரணாகதி அடைவதால் ஏற்படுவது. இங்கு விடுதலையைப் பெற பயிற்சியும் முயற்சியும் தேவையில்லை. ஏனெனில் விடுதலை-முக்தி என்பது மனித குலத்திற்கே உரித்தான சிறப்பு.

ஒவ்வொரு மனிதரும் பிறக்கும் போது விடுதலையுடன் (முக்தியுடன்) தான் பிறக்கிறோம். நமது அறிவு வளர்ந்த பிறகு அது அகம் நோக்கி தன்னுடைய ஆளுமையை செலுத்துவதனால் மட்டுமே விடுதலையில் தடை ஏற்பட்டு பிரச்சினை ஏற்படுகிறது.

### மனதை புரிந்து கொள்வது என்றால் என்ன? அக சரணாகதி என்றால் என்ன?

நம் மனதில் எத்தனையோ உணர்வுகள், எண்ணங்கள், அனுபவங்கள் தோன்றுகின்றன. இவை அனைத்தும் நாம் சந்திக்கும் சூழ்நிலைக்கு ஏற்ப நம் இயல்பிலிருந்து தாமாக தோன்றுகின்றன. இவைகளை மாற்றியமைக்கவோ அல்லது புதியதாக உருவாக்கவோ நம்மால் முடியவே முடியாது. ஏனெனில் இவை அனைத்தும் நம் மனதில் தோன்றிய பிறகுதான் நமக்கே தெரியவரும். தோன்றியவை அனைத்தும் மறையும் தருவாயில் தான் அவை வந்ததையே நம்மால் அடையாளம் காண முடிகிறது.

முதலில் மனதில் ஓர் அனுபவம் ஏற்படுகிறது. பிறகு வந்த அனுபவத்தை கண்டு உணரும் போது அந்த அனுபவத்தை அனுபவிக்கும் அனுபவிப்பவனாக நம்மையே நாம் உணர்கிறோம். அதன் பிறகு அந்த அனுபவத்தின் மீது நமது விருப்பு-வெறுப்பை காட்டுகிறோம். அந்த அனுபவம் பிடித்திருக்கிறது என்றால் அந்த அனுபவத்தை நீடிக்க முயற்சி செய்கிறோம். அந்த அனுபவம் பிடிக்கவில்லை என்றால் அதனை அப்புறப்படுத்த முயற்சி செய்கிறோம். இப்படி எந்த அனுபவமானாலும் சரி, உணர்வானாலும் சரி, எண்ணமானாலும் சரி இந்த வரிசையில் தான் உடன்பட்டோ அல்லது முரண்பட்டோ தொடர்ந்து பிடித்துக் கொண்டிருக்கிறோம்.

உண்மையில் அனுபவம்-அனுபவிப்பவன் என்றோ, உணர்வு - உணர்பவன் என்றோ, எண்ணம்-எண்ணுபவன் என்றோ இரண்டு தன்மைகளே கிடையாது.

அகத்தை பொறுத்தவரை இருப்பது ஒன்று மட்டுமே.

முதலில் ஓர் உணர்வு தாமாக தோன்றுகிறது. அது நம்மால் அடையாளம் கண்டு உணரப்படுகிறது. பிறகு அதுவே உணர்பவனாக மாறுகிறது. அந்த உணர்வின் மீது உள்ள விருப்பு-வெறுப்பினால் அதனை தக்க வைக்கவோ அல்லது அப்புறப்படுத்தவோ முயற்சி செய்கிறோம். இதுவே முரண்பாட்டை ஏற்படுத்துகிறது.

இங்கு உண்மையில் என்ன நடக்கிறது?

தனக்கு ஏற்பட்ட உணர்வோடு உணர்பவன் முரண்படவில்லை. உணர்வினால் உருவான உணர்பவன் தனக்குத்தானே முரண்பட்டுக்கொள்கிறான். இது ஒரு சுய முரண்பாடு.

**அகத்தை பொறுத்தவரை அனுபவம், அனுபவிப்பவன் இரண்டும் தனித்தனியாக தெரிந்தால் கூட இருப்பது ஒன்றே. அகத்தை பொறுத்தவரை நமது முயற்சிகள் அனைத்தும் சுய முரண்பாட்டையே ஏற்படுத்துகிறது. இதுவே மன பிரச்சினையின் ஆணிவேர்.**

அகத்தைப் பொறுத்தவரை அனுபவம் வேறு அனுபவிப்பான் வேறு அல்ல. அனுபவமே அனுபவிப்பானாக மாற்றமடைகிறது. அனுபவிப்பானின் போராட்டம் அனைத்தும் அவனுடன்தானே தவிர அனுபவத்துடன் அல்ல.

நாம் ஓர் உதாரணத்தின் மூலம் அனுபவம் தொடர்ந்து எப்படி அனுபவிப்பவனாக மாற்றமடைகிறது என்பதை பார்ப்போம்.

ஒரு வளர்ந்த மரத்தை பார்க்கிறோம். மலர்கள் பூத்து இருக்கின்றன. பூத்திருக்கும் மலர்கள்தான் காய்களாக உருமாற்றம் அடைகின்றன. பூவின் உருமாற்றம்தான் காய். காயின் முந்தைய நிலைதான் பூ. பூவே காயாக மாற்றமடைகிறது. பூவின் அடுத்த உரு மாற்றமே காய்.

இங்கு நாம் குறிப்பிடுவது மரம் என்பது நமது மனம். மலர் என்பது அனுபவம். மலரின் உருமாற்றமான காய்தான் அனுபவிப்பான். அனுபவம்தான் அனுபவிப்பவனாக உருமாற்றம் அடைகிறது. இரண்டு தன்மைகள் என்பதே இங்கு கிடையாது. பூ, காய் இரண்டும் வேறு வேறாக தோன்றினாலும் பூவே தான் காயாக மாற்றமடைகிறது. காய் என்பது பூவின் மாற்றமடைந்த நிலையே. ஆனால் காயால் ஒருபோது பூவின் தன்மையில் மாற்றத்தை ஏற்படுத்த முடியாது என்பதை காய்தான் விளங்கிக் கொள்ள வேண்டும். 'பூ இப்படி இருக்க வேண்டும்.' 'அப்படி இருக்க வேண்டும்' என்று போராடுவது-முரண்படுவது என்பது எல்லாம் காய் தனக்குத்தானே முரண்பட்டுக்கொள்ளும் சுய முரண்பாடே ஆகும். காய், பூ என்ற அனுபவத்தோடு முரண்படவில்லை மாறாக காய் என்ற அனுபவிப்பவன் பூ என்ற நிலையில் மாற்றம் ஏற்படுத்துவதற்காக போராடுவதாக எண்ணிக்கொண்டு தனக்குத் தானே முரண்பட்டு கொள்ளும் சுய முரண்பாடே இங்கு நிகழ்கிறது. அனுபவிப்பவன் ஆகிய காய் அனுபவம் ஆகிய பூவை எதிர்த்துப் போராடவில்லை. அனுபவிப்பவன் ஆகிய காய் தனக்குத்தானே முரண்படுவதையும் போராடிக் கொள்வதையும் தான் சுய முரண்பாடு என்று நாம் இங்கு குறிப்பிடுகின்றோம்.

அகத்தை பொறுத்தவரை 'இந்த உணர்வு வேண்டும்' என்றாலும் சரி, 'வேண்டாம்' என்றாலும் சரி, அது அக உணர்வுகளின் மீது காட்டும் இன்ப நாட்டமே.

அக இன்ப நாட்டம்தான் சுய முரண்பாட்டையும் துன்பத்தையும் கொடுக்கிறது.

இதைத்தான் வள்ளுவர்,

"வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல." என்று குறிப்பிடுகிறார்.

அகத்தை பொறுத்தவரை விருப்பு - வெறுப்பு இல்லாத நிலையை அடைந்தவர்களுக்கு என்றும் துன்பம் இல்லை என்று குறிப்பிடுகிறார். இதைத்தான் சரணாகதி என்று குறிப்பிடுகிறோம். சரணாகதி அடைந்த பிறகு அந்த இடத்தில் மாற்றியமைக்கவோ, சரிப்படுத்தவோ என நமக்கு அங்கு எந்த வேலையும் இல்லை.

அக உணர்வின் மீது காட்டப்படும் விருப்பு வெறுப்பும் அவற்றை மாற்றி அமைக்க நாம் முயலும் முயற்சியுமே அதன்மீது பந்தத்தை ஏற்படுத்துகிறது. இந்த பந்தமே புறச்செயலைத் தூண்டுகிறது. இப்படித்தான் மோசமான ஆறு குணங்கள் என்று குறிப்பிடுகின்ற பேராசை, சினம், கடும்பற்று, முறையற்ற பால் கவர்ச்சி, உயர்வு தாழ்வு மனப்பான்மை, வஞ்சம் போன்ற உணர்வுகளின் மீது காட்டும் விருப்பு வெறுப்பு அதன் மீது பந்தத்தை ஏற்படுத்தி பிறகு செயலுக்கு விதையாக அமைந்துவிடுகிறது.

உண்மையில் மனதில் தோன்றும் உணர்வுக்கு ஆயுள் அரை வினாடி மட்டுமே. அவற்றோடு முரண்படுவதால் மட்டுமே அவை நீடிக்கிறது. நமக்கு அங்கு வேலை இல்லை என்பதை புரிந்து கொண்டு அந்த இயற்கையான இயக்கத்தில் முரண்படாத போது தாமாக தோன்றியது போல், தாமாகவே மறைந்துவிடுகிறது.

ஒரு கண்ணாடியில் ஒரு காட்சிப் பிம்பம் பிரதிபலிக்கிறதென்றால் காட்சி மாறியவுடன் பிம்பமும் மாறிவிடும். இங்கு காலதாமதம் ஏற்படுவது இல்லை. இதுபோலதான் ஓர் அனுபவம் தோன்றி மறையும்போது அதனோடு அனுபவிப்பவனும் சேர்ந்து மறைந்து விடுகிறான்.

நமக்கு ஏற்படும் உணர்வை எதிர்த்து போராடும் நமது அக போராட்டமே அந்த உணர்வை நீடிக்க வைக்கிறது. நீடித்த உணர்வே உணர்ச்சியாக மாறி உடலைக் கெடுக்கக்கூடிய இரசாயன மாற்றத்தை ஏற்படுத்துகிறது. முரண்படாத உணர்வு நீடிப்பதில்லை. நீடிக்காத உணர்வு உடலைக் கெடுக்கும் இரசாயன மாற்றத்தை எதுவும் ஏற்படுத்துவதில்லை.

பஞ்சை கூட நெருப்பில் சிறிது நேரம் நீடித்து பிடித்தால்தான் தீப்பிடிக்கும். நெருப்பினுடே வேகமாக கடந்து செல்லும் பஞ்சை கூட தீப்பிடிக்காது.

**மனதைப் பொறுத்த வரை அனைத்தும் தாமாக தோன்றி தாமாகவே மறைய கூடியவை. அவற்றோடு ஏற்படும் முரண்பாடே அனைத்துப் பிரச்சனைகளுக்கும் ஆணிவேர்.**

"மனதில் தோன்றும் உணர்வுகள் எவையையும் நிர்வகிக்கும் பொறுப்பு நமக்கு இல்லை என்று புரிந்து கொள்ளும்போது எல்லா பிரச்சினைகளிலிருந்தும் தாமாகவே விடுபட்டுவிடுகிறோம்."

# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

பகவத் பாதையில் பயணிக்கும் அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் மார்ச் மாதம் 7 ஆம் தேதி முதல் 10ஆம் தேதி வரை மிகச் சிறப்பாக நடைபெற்றது. இதில் கலந்து கொண்ட அனைவருமே மிக நன்றாக தெளிவு பெற்று அக விடுதலையுடன் சென்றனர்.

பொதுவாக ஆன்மிகத்தில் தீவிரமான பயிற்சி முயற்சிகளை செய்து கொண்டிருப்பவர்கள் நமது ஞான முகாம்களில் கலந்து கொள்ளும் போது அவர்கள் அகவிடுதலையை அடைவதுடன் அவர்களுடைய மனமும் மிகவும் லேசாகி விடுகிறது. காரணம் அகத்தில் பல வேலைகளை செய்து கொண்டிருந்தவர்களுக்கு அங்கு நமக்கு எந்த வேலையும் இல்லை என்பதை அறிவியல் பூர்வமாக புரிந்து கொள்ளும்போது மனம் விடுதலை அடைவதோடு மனதின் அழுத்தமும் பளுவும் குறைந்து மிகவும் லேசாகிவிடுகிறது.

**எத்தனையோ தியானப் பயிற்சிகளையும் முயற்சிகளையும் செய்து கிடைக்காத ஞானமும் விடுதலையும் எப்படி ஒரு நான்கு நாள் ஞான முகாமில் கிடைத்து விடுகிறது?**

எல்லா ஆன்மிக அமைப்பின் நோக்கமும் மனதை சீரமைப்பது, மனதை உயர்த்துவது என இதற்காகவே அவர்கள் பல டெக்னிக் (Techniques) பயிற்சிகள் பலவற்றை கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். இவைகள் அனைத்தும் ஓரளவிற்கு பயன்தரக்கூடியவை. நிரந்தரத் தீர்வை அடைய வேண்டுமென்றால் மனதின் இயக்கத்தை புரிந்து கொள்ளவேண்டும். மனதின் இயக்கத்தை முழுவதுமாக புரிந்து கொண்டால் அனைத்து டெக்னிக் பயிற்சிகளையும் நாம் விட்டு விடுவோம். ஏனெனில் மனம் என்பது தன்னைத் தானே தாமாகவே சீரமைத்துக் கொண்டு நமக்கு உதவி புரிவதற்காக இயங்கக்கூடிய இயற்கையான இயக்கம். மனதின் இயக்கத்தோடு பயிற்சி என்ற முறையில் நான் முரண்படுவதால் மட்டுமே அது பிரச்சினைக்குரிய ஒன்றாக மாறிவிடுகிறது. மனதின் இயக்கத்தை புரிந்து நமது அக முயற்சிகள் அனைத்தையும் கைவிடுவதால் மட்டுமே மனதோடு நாம் அக சரணாகதி அடைய முடியும். அக சரணாகதியே விடுதலையை தரவல்லது. விடுதலையை தரவல்ல இந்த புரிதல் தான் ஞானம்.

இயற்கையின் முன் மனித முயற்சி அனைத்தும் தோல்வியே... இயற்கையை புரிந்துகொண்டு அதனோடு முரண்படாத செயலே வெற்றி பெறும். அதற்கு எதிரான செயல் அனைத்தும் தோல்வியையே தழுவும்.

புரிதலைத் தான் நமது ஞான முகாம்களில் பல கோணங்களிலும் அறிவியல் ரீதியாக ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வழங்கி வருகிறார்கள்.

அந்த வகையில் வருகின்ற மே மாதம் ஒன்றாம் தேதி முதல் ஐந்தாம் தேதி வரை ஏற்காட்டில் ஐந்து நாள் ஞான முகாம் நடைபெற உள்ளது. ஏற்காடு சுற்றுலாத் தலமாக இருப்பதாலும் தற்போது கோடை காலமாக இருப்பதாலும் இந்த ஞான முகாமில் குடும்பத்துடன் கலந்து கொள்வது மிகுந்த பயனுள்ள வகையில் அமையும்.

மேலும் இதனை தொடர்ந்து ஜுன், ஜுலை மற்றும் ஆகஸ்ட் மாதங்களில் நடைபெறும் ஞான முகாமிகளின் விபரங்கள் இந்த இதழில் கொடுக்கப்பட்டுள்ளன.

இதனை அனைவருக்கும் தெரிவித்து தாங்களும் பயன்படுத்திக் கொள்ளுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

மேலும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் சேலம் ஸ்ரீ பகவத் பவனில் பிரதி மாதம் 1 ஆம் தேதி முதல் 15 ஆம் தேதி வரையிலும் 16 ஆம் தேதியில் இருந்து 31 ஆம் தேதி வரை சென்னையிலும் தங்க முடிவு செய்திருக்கிறார்கள்.

அதற்காக சென்னையிலும் சேலத்தை போன்று ஸ்ரீ பகவத் பவன் ஒன்றை உருவாக்கலாம் என்று ஐயாவின் ஆலோசனை படி திட்டமிட்டுள்ளோம்.

ஐயா அவர்கள் பிரதி மாதம் 16 ஆம் தேதி முதல் 31 ஆம் தேதி வரை சென்னையில் தங்கி இருப்பதற்கும், அவரைச் சந்திக்கவருபவர்கள் தங்கிச் செல்லவும், ஞான முகாம் நடத்துவதற்கு வசதியாகவும் அதனை அமைக்க எண்ணியுள்ளோம்.

அதற்காக சென்னையின் மையப் பகுதியிலோ அல்லது சென்னையின் சுற்றுப் பகுதிகளிலோ நாம் அனைவரும் ஒன்று கூடி வந்து செல்வதற்கு வசதியான இடத்தை தேடிக் கொண்டிருக்கிறோம்.

இது சம்பந்தமான ஆலோசனை கூட்டமொன்றை சென்னையில் ஏப்ரல் மாதம் ஏழாம் தேதி ஏற்பாடு செய்துள்ளோம்.

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினராகிய தாங்களும் தங்களது மேலான ஆலோசனைகளை வழங்குமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

இது பற்றிய தங்களது கருத்துகளை வரவேற்கிறோம்.

# <u>ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞான முகாம்கள்</u>

| நாள் | விபரம் | செலவு பகிர்வு |
|---|---|---|
| 1.6.2019<br>காலை 11.00 மணிமுதல்<br>4.6.2019<br>மதியம் 3.00 மணிவரை | **4 நாள் ஞான முகாம்**<br>இடம் :<br>ஸ்ரீபகவத் பவன், சேலம். | ரூ. 3000/-<br>மட்டும். |
| 15.6.2019<br>காலை 11.00 மணிமுதல்<br>16.6.2019<br>மதியம் 3.00 மணிவரை | **ஞான உறுதி முகாம்**<br>(ஏற்கெனவே ஞானமுகாமில் கலந்து கொண்டவர்களுக்கு மட்டும்)<br>இடம் : ஸ்ரீபகவத் பவன், சேலம். | ரூ. 1000/-<br>மட்டும். |
| 6.7.2019<br>காலை 11.00 மணிமுதல்<br>7.7.2019<br>மதியம் 3.00 மணிவரை | **மாணவர்களுக்கான வாழ்வியல் முகாம்**<br>(10, 11, 12 ஆம் வகுப்பு மற்றும் கல்லூரி மாணவர்களுக்கு மட்டும்)<br>இடம் :<br>ஸ்ரீபகவத் பவன், சேலம். | அனுமதி இலவசம்.<br>நன்கொடைகள் வரவேற்கப்படுகின்றன. |
| 11.7.2019<br>காலை 11.00 மணிமுதல்<br>14.7.2019<br>மதியம் 3.00 மணிவரை | **4 நாள் ஞான முகாம்**<br>இடம் :<br>ஸ்ரீபகவத் பவன், சேலம். | ரூ. 3000/-<br>மட்டும். |
| 3.8.2019<br>காலை 11.00 மணிமுதல்<br>4.8.2019<br>மதியம் 3.00 மணிவரை | **ஞான உறுதி முகாம்**<br>(ஏற்கெனவே ஞான உறுதி முகாமில் கலந்து கொண்டவர்களுக்கு மட்டும்)<br>இடம் :<br>ஸ்ரீபகவத் பவன், சேலம். | ரூ. 1000/-<br>மட்டும். |
| 15.8.2019<br>காலை 11.00 மணிமுதல்<br>18.8.2019<br>மதியம் 3.00 மணிவரை | **4 நாள் ஞான முகாம்**<br>இடம் :<br>ஸ்ரீபகவத் பவன், சேலம். | ரூ. 3000/-<br>மட்டும். |

<u>முன்பதிவிற்கு</u>

**ஸ்ரீ பகவத் மிஷன்,** 31, இராமலிங்கசாமி தெரு, அம்மாபேட்டை, சேலம்-3.

**79041 18421, 99942 05880, 97891 65555**

# நிகழ்ச்சி நிழல்கள்






சென்னை அன்பர்களுடன்

ஏற்காட்டில் நடைபெற்ற அஃகு ஹீலர் அ. உமர்பாரூக் அவர்களின் அல்ட்ரா மைண்ட் நிகழ்ச்சியில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் உரையாற்றியபோது



கொடம்பக்காடு மலைச்சாரலில் இயற்கையில் விளைந்த பெருநெல்லியை பறிக்கும்போது...



மாலை நேர நடைபயிற்சிக்குப் பிறகு ஓய்வு.



காலை நடைப்பயிற்சியை முடித்துவிட்டு ஐயா ஓய்வாக நிற்கும் காட்சி



ஞாயிறு ஒளிக்கு முன் ஞான ஒளி



ஸ்ரீ பகவத் ஐயாவுடன் நமது அன்பர் ஓசூர் திருமதி பார்வதகுமாரி அவர்கள் குடும்பத்தினர்.



ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் மார்ச் மாதம் நடைபெற்ற ஞான முகாமில் கலந்து கொண்டவர்கள்

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.



நமது ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞான கருத்துக்களை கொண்ட நூல்களை அழகாக அடிக்கி வைப்பதற்கு வசதியாக நமது ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர் **புதுக்கோட்டை ராயல் பர்னிச்சர்ஸ் உரிமையாளர், வீரன் சுப்பையா** அவர்கள் தானே முன் வந்து புத்தகங்கள் அடுக்கும் **புத்தக ஸ்டேண்டு நான்கு** தயார் செய்து ஸ்ரீ பகவத் பவனுக்கு அனுப்பியிருக்கிறார்.

அவர்களுக்கு நம் அனைவரின் சார்பாகவும் உளமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

இப்படிக்கு
**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்.











ஸ்ரீ பகவத் பவன் அமைந்துள்ள கொடம்பக்காடு மலைச்சாரலின் இயற்கை எழில் கொஞ்சும் அழகு...

# ஜென் கதை

## "கிணறு கொடுத்த ஞானம்"

பொறுப்பற்ற ஓர் இளைஞன் பொழுதுபோக்கிற்காக ஞானம் பெற விரும்பினான். தனக்கு ஞானத்தை கொடுக்கக்கூடிய சரியான குருநாதர் யார் என்று அறிவதன் பொருட்டு ஒவ்வொரு குருமார்களின் தகுதிகளையும் ஆராய்ந்து வந்தான். அவன் எதிர்பாக்கும் தகுதியில் யாரும் இல்லை. அவனுக்கு ஞானமும் கிடைக்கவில்லை. இறுதியாக நடு காட்டில் வசிக்கும் ஒரு ஜென் குரு நாதரை சந்தித்து, தான் இதுவரை சந்தித்த பல மகான்களைப் பற்றிய விவரங்களை எடுத்துரைத்தான். "எனக்கு மட்டும் இன்னும் ஞானம் சித்தியாக வில்லையே. அது ஏன்?" என்று ஞானியிடம் கேட்டான் இளைஞன். ஞானி அமைதியாக கேட்டுக் கொண்டிருந்து விட்டு தன்னுடன் சில நாட்கள் தங்கியிருந்து செல்லும்படி கூறினார்.

இளைஞனும் ஞானியுடன் சில நாட்கள் தங்கியிருக்க முடிவு செய்தான்.

தினமும் ஞானி கூறுவதை முழுமையாக கேட்பதற்கு முன்பாகவே குறுக்கிட்டு "அந்த ஞானி அப்படி கூறியிருக்கிறார்." "அந்த மகான் இப்படிக் கூறியிருக்கிறார்" என்று தான் சந்தித்த பல

குருமார்களின் கருத்துக்களையும் எடுத்துக்கூறி விவாதித்து வந்தான் இளைஞன்.

ஒரு நாள் ஞானியுடன் காலை நேர நடைப்பயிற்சியின் போது விவாதித்துக் கொண்டே வந்த இளைஞனின் விவாதம் முடிவுக்கு வரவில்லை.

பாதையின் ஓரத்தில் இருக்கும் அகன்றஆழமான கிணற்றில் முற்றிலும் எதிர்பாராத சூழ்நிலையில் இளைஞனை திடீரென தள்ளிவிட்டார் ஞானி. கிணற்றுக்குள் விழுந்த இளைஞன் மிகவும் ஆக்ரோஷமாக ஞானியை நோக்கி கத்தத் தொடங்கினான்.

"கவலை கொள்ள வேண்டாம், ஆசிரமத்தில் இருக்கும் பெரிய வலிமையான கயிற்றை எடுத்து வருகிறேன்" என்று கூறி மறைந்தார் ஞானி.

இளைஞனுக்கு தாங்க முடியாத ஆற்றாமை, மனவேதனை, என்ன செய்வது என்று தெரியாமல் கோபத்தில் வெடித்தான். "இவ்வளவு மோசமான ஆளை போய் குருவாக நம்பி ஏமாந்து விட்டோமே" என்று மிகவும் வேதனை அடைந்தான்.

அந்தக் கிணற்றில் கொடிய விஷ ஜந்துக்கள் நிறைந்து கிடந்தன. எப்படியாவது உயிர் பிழைக்க வேண்டும் என்று தத்தளித்துக் கொண்டிருந்த அவனுக்கு கிணற்றின் ஓரத்தில் இருந்த மரத்தின் வேர் கைக்கு அகப்பட்டது. உடனே அதை பற்றிபிடித்து கொண்டு கிணற்றின் மேலே வருவதற்கு முழுமூச்சாக செயல்பட்டான் இளைஞன்.

ஞானி வலிமையான கயிற்றுடன் வந்து கிணற்றில் ஏறிக் கொண்டிருக்கும் இளைஞனை நோக்கி கயிற்றை வீசினார்.

ஆனாலும் அவர் வீசிய கயிற்றை இளைஞன் பிடிக்காமல் தான் பிடித்து ஏறிக்கொண்டிருந்த மரத்தின் வேரையே கெட்டியாக பிடித்துக் கொண்டு மேலேறிக் கொண்டிருந்தான்.

கிணற்றின் மேல் விளிம்பில் தட்டித் தடுமாறி ஏறிக்கொண்டிருந்த இளைஞனுக்கு கை கொடுத்து மேலே இழுத்தார் ஞானி.

மேலே வந்த இளைஞனுக்கு கொஞ்சம் தண்ணீர் கொடுத்து ஆசுவாசப்படுத்தினார் ஞானி. கோபத்திலும் பதட்டத்திலும் இருந்த இளைஞன் கொஞ்ச கொஞ்சமாக நிதானத்திற்கு வந்தான்.

"ஆசிரமத்தில் இருந்த வலிமையான கயிறை எடுத்து வருவதற்குள் உனக்கு என்ன அவசரம்?" என்று கேட்டார் ஞானி.

"கிணற்றுக்குள் உங்களை தள்ளி விட்டு இருந்தால் என்ன அவசரம் என்பது புரிந்திருக்கும். நீங்கள் கயிறு கொண்டு வருவதற்குள் நான் இறந்தே போய் விட மாட்டேனா? உயிர் பிழைப்பதற்காக கண்ணில் தென்பட்ட மரவேரை பிடித்து கிணற்றுக்கு மேலே ஏறி தப்பித்தேன்" என்றான் இளைஞன்.

"அந்த மரத்தின் வேர் அவ்வளவு வலிமையானது தானா, மேலே ஏறுவதற்கு தகுதியானதுதானா? என்பதை ஆராயாமல் எப்படி அதைப் பிடித்துக்கொண்டு கிணற்றுக்கு மேலே ஏற முயன்றாய்" என்றார் ஞானி.

அந்த மரத்தின் வேர் வலிமையானதா? வலிமை இல்லாததா? என்பதைப் பற்றியெல்லாம் எனக்குத் தெரியாது. என் முழு கவனமும் எப்படியாவது உயிர் பிழைக்க வேண்டும் என்பதில் மட்டுமே இருந்தது எனவே கைக்கு அகப்பட்டதை பற்றி பிடித்து ஏறினேன்" என்றான் இளைஞன்.

"கிணற்றின் மேலே வருவதற்கு எந்த குருநாதரின் உபதேசம் உனக்கு உதவியது?" என்று கேட்டார் ஞானி.

இப்படி ஒரு கேள்வியை முற்றிலும் எதிர்பார்க்காத இளைஞன் பேசுவதற்கு வார்த்தைகள் இன்றி மௌனமானான்.

"உயிர் பிழைப்பதற்கு எந்த அளவிற்கு தீவிரமாக செயல்பட்டாயோ அந்த அளவிற்கு தீவிரம் ஞானம் பெறுவதிலும் இருந்திருக்க வேண்டும். அப்போது மட்டும்தான் ஞானம் சித்திக்கும். பொழுதுபோக்காக ஞானத்தை தேடுவதால் ஒருபோதும் சித்திக்காது" என்றார் ஞானி.

ஞானியின் இந்த வார்த்தை இளைஞனுக்கு தலையில் சம்மட்டியால் அடித்தது போன்ற உணர்வு ஏற்பட்டது.

நீண்ட நேர மௌனத்திற்குப் பிறகு, "அப்படி எனில், குருவைக் காட்டிலும் சிஷ்யனுடைய உள்ளார்ந்த தீவிரமான முயற்சியால் மட்டுமேதான் ஞானத்தை அடைய முடியுமா?" என்றான் இளைஞன்.

"குருவை காட்டிலும் சிஷ்யனின் வைராக்கியமும் தீவிர முயற்சி மட்டுமே அவனுக்கு ஞானத்தை வழங்கும். ஒரு சரியில்லாத குருநாதரிடம் சிஷ்யன் சென்றாலும்கூட அவனுடைய உண்மையான தீவிரமான தேடுதலே அவனுக்கு ஞானத்தை வழங்கும்" என்று கூறி குருவை விட சிஷ்யனின் தீவிர முயற்சியே ஞானத்தை கொடுக்கும் என்று ஆணித்தரமாக சொல்லி முடித்தார் ஞானி.

இளைஞனுக்கு இப்போதுதான் தனக்கு நடந்ததை தெளிவாக புரிந்து கொள்ள முடிந்தது.

தன்னுடைய இந்த நிலையை ஞானி நன்றாக உள்வாங்கிக் கொண்டு எனக்கு ஞானம் கிடைக்க வேண்டும் என்பதற்காக எடுத்த முயற்சியே இந்த பாழும் கிணற்றில் என்னைதள்ளியது என்பதை நன்கு புரிந்து கொண்டான் இளைஞன்.

தான் ஞானம் பெற வேண்டும் என்பதற்காக ஞானி எடுத்த இந்த முயற்சியை நினைத்தவுடன் இளைஞனுக்கு கண்ணீர் பெருகியது. உடல் நனைந்தது. உள்ளம் உருகியது. அவரது பெரும் கருணையைக் கண்டு, அவரது பாதத்தில் நன்றியுடன் சாஸ்தானமாக விழுந்தான் இளைஞன்.

**Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698**
**Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020 Posted at Salem HOP 636001. On 10th of every month.**

**Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.**
**Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555**